# Sigaram சிகரம்





A SEMI-MONTHLY **SOCIAL PROGRESSIVE JOURNAL**

Issued Free | Oct. 01 - 15, 2011 | Vol. 01 Iss. 01 | Tel.: 416.388.2003 | Fax: 647.726.6036 | Email: info.sigaram@gmail.com | Web: www.sigaram.ca




செல்வன் அரவிந்த்
குகேந்திரனின்
## மிருதங்க அரங்கேற்றம்

செல்விகள் டர்சி,
லக்ஷி பஞ்சலிங்கம்
சகோதரிகளின்
## பரதநாட்டிய அரங்கேற்றம்



## நிதிசேர் நடை




## தீர்க்க சுமங்கலி - இசை நாடகம்





House of Commons




*Hon. Jim Karygiannis*
*Member of Parliament*
*Scarborough-Agincourt*

*Ottawa Office*
*House of Commons*
*118 Justice Building*
*Ottawa, Ontario*
*K1A 0A6*
*Tel: 613 992 4501*
*Fax: 613 995 1612*

*Constituency Office*
*3850 Finch Ave. E.*
*Suite 206*
*Scarborough, Ontario*
*M1T 3T6*
*Tel: 416 321 5454*
*Fax: 416 321 5456*

*E-Mail*
*jim@karygiannismp.com*

*Website*
*www.karygiannismp.com*


*October 2011*

*Dear Friends:*

*I would like to commend Sigaram Publications on launching 'The Social Progressive Journal' Magazine.*

*'The Social Progressive Journal' Magazine will focus on the Tamil community's rich traditions, cultural events, sports and news and will also feature motivational essays written by internationally renowned authors. This Tamil publication will engage young people and their families with respect to embracing their heritage and getting involved in activities where they can make positive contributions to the community and to society.*

*Congratulations to the publisher and staff.*

*Best wishes for a successful future.*

*Sincerely,*

*James Karygiannis*

*Hon. Jim Karygiannis. P.C., M.P.*
*Scarborough-Agincourt*



**Councillor Logan Kanapathi**
*Markham-Ward 7*

***Office***

*101 Town Centre Blvd.*
*Markham, Ontario, L3R 9W3*

*Tel: 905-479-7748*

*Fax: 905-479-7763*

***E-Mail***

*lkanapathi@markham.ca*

***Website:***

*www.logankanapathi.com*




Sep 27, 2011.

On behalf of the Mayor, Members of Council and the Town of Markham I am pleased to extend our best wishes to Sigaram Publications on the launch of **Sigaram Magazine**, a Social Progressive Journal.

This semi-monthly magazine will be welcomed by the large Canadian Tamil Community as it promises to bring Tamil Community's traditional culture news and views as well as motivational articles to our younger generation. I hope Sigaram will be an important tool of outreach and a valuable source of information to Tamil Community.

As a Councillor, I am proud of your efforts, wish you all the best as this new endeavour progresses and makes a positive impact in our community.

Kindest Regards,

Logan Kanapathi
Councillor Ward 7 Markham

# இதழின் உள்ளே...




வணக்கம்!
இப் புதிய இதழ் உங்கள் கரங்களில் வந்தடைவதில் மிக்க மகிழ்ச்சி.
புலம் பெயர்ந்து வாழும் இக் கனடா மண்ணில், எமது சமூகத்தைப் பிரதிபலிப்பதாய் ஓர் சஞ்சிகையினைக் கொண்டு வரவேண்டும் என்ற நீண்ட அவாவின் வெளிப்பாடே இவ்விதழ்!
இன்றைய தொழில்நுட்ப வளர்சியின் அதிவேகத்தினால் மக்களின் அன்றாட வாழ்க்கை முறையிலும் பல மாற்றங்கள் மிக வேகமாக நடந்துகொண்டே இருக்கின்றன. குறிப்பாகப் புலம் பெயர்ந்து வாழும் மக்களின் வாழ்க்கை முறைகளில் மாற்றத்தை அவதானிக்கலாம்.
புலம்பெயர்ந்து வாழும் எமது சமூகமும் இதற்கு விதிவிலக்கல்ல.
எமது இளைய தலைமுறையினரின் வாழ்க்கை முறையில் மிகுந்த அக்கறை செலுத்துவது இன்றைய காலத்தின் கட்டாய கடமையாகும்.
அந்த வகையில் இச் சஞ்சிகையின் பங்களிப்பு எமது சமூகத்தின் முன்னேற்றத்திற்குக் கைகொடுக்கும் எனத் திடமாக நம்புகிறோம். கடல் கடந்து வந்தாலும் எமது மொழி, கலை, கலாச்சார விழுமியங்களுக்கு உட்பட்டு அவற்றினை ஊக்கப்படுத்தி எம்இனத்தின் அடையாளங்களைத் தக்க வைப்பதில் முன்நிற்போம்.
இங்கு நடைபெறும் எமது கலை, கலாச்சார நிகழ்வுகள், சமூக முன்னேற்ற நிகழ்வுகள் போன்றவற்றிற்குக் கை கொடுப்பதோடு இச் சஞ்சிகைக்காக கனேடிய, இலங்கை மற்றும் இந்திய பிரபல எழுத்தாளர்கள் தங்களது ஆக்கங்களைத் தந்துதவ முன்வந்துள்ளார்கள். எங்கள் முயற்சிக்கு வாசகர்கள், வர்த்தகப் பெருமக்களாகிய உங்களது ஆக்கமும் ஊக்கமும் எமக்கு மிக மிக இன்றியமையாதது எனக் கூறிக்கொள்கின்றோம்.
நன்றி.

- ஆசிரியர் குழு

இச் சிகரம் சஞ்சிகை தொடர்பான உங்கள் கருத்துக்களை எதிர்பார்க்கின்றோம்.
மின்னஞ்சல் மூலமாக **info.sigaram@gmail.com** அல்லது தொலைநகல் மூலமாக **647.726.6036** க்கு அனுப்புங்கள். உங்கள் கருத்துக்கள் சிகரத்தின் பாதையினை வலுவாக்கும்.




*Hon. Editor: A.Sriram | Associate Editors: T.Bala, R.Siva*
*Managing Editor & Publisher: V.Guna*
*Public Relations: T.Mayuran, V.Rajesh | Design & Layout: Sigaram Team*
*Circulation Manager: S.Alex*
*Circulation Areas: Toronto (GTA), Mississauga, Brampton, Vaughan, Richmond Hill, Markham, Pickering, Ajax, Ottawa and Montreal.*


*Mailing Address:*
*Sigaram Publications, P.O. Box 30038, 2355 Warden Ave., Scarborough, ON M1T 0A1, Canada.*
*Telephone: 416.388.2003 Fax: 647.726.6036*
*Email: info.sigaram@gmail.com Web: www.sigaram.ca*

# மனித உரிமைப் போருக்கு நிதி சேர்க்கக் கடலெனத் திரண்ட கனேடியத் தமிழர்

## சர்வதேச மன்னிப்புச் சபைக்காக $50,000 சேகரிப்பு




















கனேடியத் தமிழர் பேரவையினால் ஒழுங்கு செய்யப்பட்ட 3வது வருடாந்த நிதிசேர் நடைபவனியில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான தமிழ் நெஞ்சங்களால் கடந்த 18ம் திகதி ஞாயிற்றுக்கிழமை ஸ்காபரோவிலுள்ள தொம்ஸன் பூங்காவானது மஞ்சள் நிறத்தில் ஒளிர்ந்து காட்சியளித்தது.

முழு மஞ்சள் நிற ரீசேட் அணிந்து, ஸ்காபரோ நகரைச் சுற்றி 5 கிலோ மீற்றர்கள் நடை வந்த பவனியினர், மனித உரிமைகளுக்காகப் பாடுபடும் சர்வதேச மன்னிப்புச் சபைக்காக $50,000 சேர்த்துக் கையளித்தனர். இதைத் தொடர்ந்து தொம்ஸன் பூங்காவில் பல நிகழ்ச்சிகளும், உரையாற்றல்களும் நடந்தேறின.

பலவயதைச் சான்றோரும் பங்குபற்றிய இந் நடைபவனி ரொறன்ரோ சுற்று வட்டாரத்தைச் சேர்ந்த பல சமூக நிறுவனங்களின் ஆதரவைப்பெற்றது இங்கு குறிப்பிடத் தக்கது.

நடைபவனியை முன்னிட்ட ஆரம்ப விழாவில் பல அரசியல் பிரதிநிதிகளும், சமூகத் தலைவர்களும் பங்கேற்றி உரையாற்றினர். ரொறன்ரோ நகரசபை அங்கத்தவர் திரு. மைக்கல் தொம்ஸன், மார்க்கம் நகரசபை அங்கத்தவர் திரு. லோகன் கணபதி, ஸ்காபரோ சென்ரர் ஒன்ராறியோ மாகாண சபை உறுப்பினரும் அமைச்சருமான திரு. பிராட் டுகுய்ட், ஸ்காபரோ கில்வூட் ஒன்ராறியோ மாகாண சபை உறுப்பினரும் அமைச்சருமான திருமதி மார்கிரேட் பெஸ்ட், ஸ்காபரோ ரூஜ் றிவர் பாராளுமன்ற உறுப்பினரான செல்வி ராதிகா சிற்சபைஈசன், ஸ்காபரோ கில்வூட் பாராளுமன்ற உறுப்பினரான திரு. ஜோன் மக்கே, பீச்சஸ் பாராளுமன்ற உறுப்பினரான திரு. மத்தியூ கெல்வே ஆகியோர் தமிழர் சமூகத்தின் முன்னோக்குக் கொள்கைகளைப் பாராட்டி இவ்வைபவத்தில் உரையாற்றினர்.

மற்றும், தற்போது நடக்கவிருக்கும் ஒன்ராறியோ மாகாணத் தேர்தல் களில் போட்டியிடும் தமிழர் திரு. நீதன் ஷான், திரு. ஷான் தயாபரன், மற்றும் திருமதி கத்லீன் மதுரீன் ஆகியோரும் இந்த நடைபவனியில் பிரசன்னமாகியிருந்தனர்.

ஒன்ராறியோ மாகாண பிரதமர் மதிப்புக்குரிய திரு. டால்ரன் மக்கின்ரி, கனடா புதிய ஜனநாயகக் கட்சியின் தலைவியும், பாராளுமன்ற உறுப்பினருமாகிய திருமதி நிக்கோல் டேர்மெல், கனடா லிபரல் கட்சித் தலைவரும், பாராளுமன்ற உறுப்பினருமாகிய திரு. பாப் ரே ஆகியோரின் சிறப்புச் செய்திகள் அவர்களது பிரதிநிதிகளால் வாசிக்கப் பெற்றன.

சர்வதேச மன்னிப்புச் சபையின் கனடாக் கிளை செயலாளர் நாயகம் திரு. அலெக்ஸ் நீவ் மனித உரிமைகளுக்காக பாடுபட வேண்டிய தேவைகளை வலியுறுத்தி உரையாற்றி அதனை ஆதரிக்கும் தமிழ் சமூகத்தை மனம் திறந்து பாராட்டினார்.

சர்வதேச மன்னிப்புச் சபை ஆரம்பித்து இவ்வருடத்துடன் 50 ஆண்டுகள் நிறைவுபெறுகின்றன. இதைக் கொண்டாடும் முகமாக ஒரு பிறந்தநாள் 'கேக்'கும் வெட்டப்பட்டது இந்த நடைபவனி வைபவத்திற்கு பொலிவைக் கூட்டியது.

கனேடியத் தமிழர் பேரவை கடந்த மூன்று வருடங்களாக நடைபவனிகளை ஒழுங்கு செய்து வெற்றிகரமாக நடாத்தி வருவது யாவரும் அறிந்ததே.





கடந்த இரண்டு வருடங்களில் Sick Kids Foundation க்கு 42,000 டொலர்களும், Canada Cancer Society க்கு 36,000 டொலர்களும் இந்த நடைபவனிகளால் நிதி சேகரித்து வழங்கப்பட்டுள்ளன.

இவ்வருடம் சேகரிக்கப்பெற்ற 50,000 டொலர்கள் மனித உரிமைகளின் மகத்துவத்தை கனேடியத் தமிழர்கள் எவ்வளவு முக்கியமாகக் கருதுகிறார்கள் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

கடந்த 50 வருடங்களாக ஈழத்தில் அல்லல் பட்டுக் கொண்டிருக்கும் அனேக தமிழர்களுக்கு சர்வதேச மன்னிப்புச் சபையின் இடைவிடாத மனித உரிமைப் போராட்டங்களும், உண்மை நிலைமையை வெளிப் படுத்தும் அறிக்கைகளும் உதவி புரிந்து வருகின்றன. அண்மையில் பிரித்தானிய தொலைக்காட்சிச் 'சனல் 4'ஆல் தயாரிக்கப்பெற்ற இலங்கை அரசாங்கத்தின் போர்க்குற்றங்கள் தொடர்பான ஆவணப்படமும் சர்வதேச மன்னிப்புச் சபையின் ஆதரவைப் பெற்றிருந்தது இங்கு குறிப்பிடத்தக்கது.

ஐம்பது வருடங்களுக்கு முன்னால் ஒரு சிறு குழுவினரால் ஆரம்பிக்கப் பெற்ற சர்வதேச மன்னிப்புச் சபை இன்று உலகளாவ வளர்ந்து அனேக நாடுகளில் நடைபெறும் அன்னியச் செயல்களை எடுத்துக்காட்டி மனித உரிமைகளுக்காகப் போராடுவது தமிழர் சமூகம் செய்த மிகப்பெரும் பாக்கியமாகும். அதன்பாலான ஒரு சிறு நன்றிக்கடனே கனேடியத் தமிழர் பேரவையினால் ஒழுங்கு செய்யப்பட்ட 3வது வருடாந்த நிதிசேர் நடைபவனியாகும்.

• • • • • • • •



### சிறப்புற இடம்பெற்ற டர்சி, லக்ஷி பஞ்சலிங்கம் சகோதரிகளின்

# பரதநாட்டிய அரங்கேற்றம்



மிஸிஸாகா பால விமல நர்த்தனாலய குருவுடன் செல்விகள்

கடல் கடந்து வாழும் நாடுகளில் நம்மவர்கள் தங்கள் பாரம்பரியக் கலைகளில் பிள்ளைகளைப் பயிற்றுவித்து அவர்கள் கற்ற கலையை அவையிலே மேடையேற்றி அவர்களுக்குப் பெருமையைத் தேடிக் கொள்வதில் மிகவும் ஆர்வத்தோடு ஈடுபட்டுவருவது கண்கூடு. கனடாவில் குறிப்பாக ரொறன்ரோ பெரும்பாகத்தில் உள்ள நடன, இசை ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களுக்குக் கற்றுத்தந்த கலையை மேடையேற்றுவதில் பெற்றாரோடு இணைந்து செயற்படுவதில் தமக்கும் பெருமை சேர்த்துக் கொள்கின்றார்கள். அந்த வகையில் பால விமல நர்த்தனாலய அதிபர் பரதகலாவித்தகர் ஸ்ரீமதி சித்ரா தர்மலிங்கம் அவர்களின் முதலாவது அரங்கேற்ற நிகழ்வாக செப்டம்பர் 11ம் திகதி 2011 அன்று ஸ்காபரோ சீன கலாச்சார மண்டபத்தில் மேற்படி சகோதரிகளின் நடன அரங்கேற்றம் இடம்பெற்றது.

வழமைபோன்று சதங்கைப் பூஜை யோடு ஆரம்பமான இந்த நிகழ்வினைத் தமிழில் TVI தொலைக்காட்சி நிகழ்ச்சித் தொகுப்பாளர்களான திரு. இராம்பிரசாந், செல்வி தர்சினி வரப்பிரகாசம் ஆகிய இருவரும் தொகுத்து வழங்கினர். மேடையை அலங்கரித்த நட்டுவாங்கம் தந்த நடன ஆசிரியை உட்பட அனைத்து இசைக்கலைஞர்களும் அணியுடை தரித்து கவர்ச்சிகரமாகக் காட்சிதந்தனர். மிருதங்க வித்துவான் ரதிரூபன் பரம்சோதி, வாய்ப்பாட்டிசை வித்தகர் மோகன் திருச்செல்வம், வயலினிசை வித்தகர் ரி.என். பாலமுரளி, புல்லாங்குழல் வித்தகர் தயாபரன் செல்வநாயகம், மோர்சிங் இசை வழங்கிய செல்வன் சஜீ செல்லத்துரை அனைவருமே ஒரே விதமான அணியுடை அணிந்து கவர்ச்சிகரமாகக் காட்சியளித்ததோடு பின்னணி இசையால் நடன அரங்கேற்றத்தை மெருகூட்டினர்.

இராகமாலிகாவில் அமைந்த நிருத்தாஞ்சலியோடு ஆரம்ப மானது நடன நிகழ்வுகள். அர்த்தநாரீஸ்வரர் ஸ்துதியைத் தொடர்ந்து நிருத்தஸ்வராளி இடம்பெற்றது. ஷண்முகப்பிரியாவிலும் ரூபக தாளத்திலும் அமைந்த நிருத்தியோபகாரம் இடம்பெற்றது. தொடர்ந்து இடம்பெற்ற பதவர்ணம் காப்பி இராகத்தில் அமைந்த நேற்று அந்தி நேரத்திலே என்னும் பாடலின் பொருள் விளங்க நடனத்தை அமைத்திருந்தார் நடன ஆசிரியை.

அதனைத் தொடர்ந்து சின்னச் சின்னப் பாதம் என்னும் பாடலுக்கான பதத்தைத் தந்தார் செல்வி லக்ஷி. தொடர்ந்து பாரதியாரின் பாடலான தக தக வென ஒலிக்கும் என்னும் பாடலுக்கான நடனம் இடம்பெற்றது. அதனைத் தொடர்ந்து ஈழத்து நிலையைச் சித்தரிக்கும் சிறப்பு நடனம் ஈழத் தமிழ் மணம் என்னும் பாடலை இராகமாலிகாவில் அமைத்துத் தந்திருந்தனர்.

அதனைத் தொடர்ந்து நிருத்தா ங்காரம் எனப்பெயர் கொண்ட தில்லானாவைத் தொடர்ந்து மங்களம் இசைக்கப்பட்டது. சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டு உரையாற்றிய முன்னைநாள் அதிபர் திரு. பொ. கனகசபாபதி அவர்கள் நடன ஆசிரியையின் அசாத்தியத்துணிவைப் பாராட்டியதோடு அவருக்கு இது முதலாவது அரங்கேற்றம் போலக் காணப்படவில்லை என்றும் தனது குருவையே இங்கிலாந்தில் இருந்து அழைத்துப் பிரதம விருந்தினராக அமரச்செய்து துணிவோடு நட்டுவாங்கம் செய்தமையைப் பாராட்டாமல் விடமுடியாது என்றார். நடனச் செல்விகளை இந்தளவு தூரத்திற்குப் பழக வைத்து மேடை யேற்றிய பெற்றோரையும் பாராட்டி வாழ்த்தினார்.

தொடர்ந்து நடனச் செல்விகளின் பாடசாலை ஆசிரியையான ஜெனேற் மில்லர் அவர்கள் உரையாற்றும்போது டர்சி, லக்ஷி இருவருமே தனது பாடசாலைக்காலத்தில் மேற்கொண்ட சேவைகளையும் அவர்களின் கற்றற் சிறப்புக்களையும் எடுத்துரைத்து அவர்கள் பெற்றுக் கொண்ட விருதுகள் பாராட்டுக்களையும் எடுத்துரைத்து இந்த அழகிய கலையைப் பயின்று மேடையேற்றியதற்கு பாராட்டையும் தெரிவித்ததோடு தனக்கு ஒரு சந்தர்ப்பத்தைத் தந்து இந்த அழகிய கலைநிகழ்வைக் கண்டு களிக்க வைத்தமைக்கும் நன்றி தெரிவித்ததோடு நடன ஆசிரியை உட்பட இசைக்கலைஞர்களையும் பாராட்டினார்.

தொடர்ந்து இங்கிலாந்தில் இருந்து வருகை தந்திருந்த பிரதம விருந்தினரான நடன ஆசிரியை ஸ்ரீமதி நளாயினி இராசதுரை அவர்கள் உரையாற்றுகையில் எனது மாணவியா இங்கு நட்டுவாங்கம் செய்கின்றாள் என்பதனை என்னால் நம்பமுடியவில்லை என்றும், மிகச் சிறப்பாக அவள் செய்திருப்பது எனக்குப் பெருமை தருகின்றது என்றும் உரைத்தார். அவளது அபாரத்திறமையை என்னை இங்கு அழைத்துவைத்து இதை உனக்குத் தட்டிக்காட்டுகின்றேன் என்று நட்டுவாங்கம் செய்திருக்கின்றாள். அவள் எதிர்காலத்தில் பல அரங்கேற்றங்களைச் செய்வாள் என்ற நம்பிக்கையை வெளியிட்டதோடு மாணவியர் இருவரும் இந்த அருங்கலையைத் தொடர்ந்தும் கற்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டதோடு இசைக்கலைஞர்களை ஒவ்வொருவராகப் பாராட்டி உரையாற்றினார்.

நிகழ்சிகள் முடியும் வரை அரங்கம் ரசிகர் வெள்ளத்தால் நிறைத்திருந்தது செல்விகளின் அரங்கேற்றத்தினை மேலும் சிறப்பான விழாவாக்கியது.

– த.சிவபாலு





# மாறட்டும் உங்கள் வாழ்க்கை



– மரபின்மைந்தன் முத்தையா –

நடுநிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த அந்த அமெரிக்கச் சிறுவனுக்கு, மதிய உணவுக்கென அவன் அம்மா அன்றாடம் தந்தனுப்பும் தொகை மூன்று டாலர்கள். பள்ளிக்குச் செல்லும் வழியில் முப்பது 'க்ளூ ஸ்ரிக்ஸ்' களை ஒன்று பத்து சதங்கள் என்ற விலைக்கு வாங்கி, பள்ளியில் ஒவ்வொன்றையும் இருபத்தைந்து சதங்களுக்கு விற்றுவிடுவான் அவன். தின மும் மதியத்திற்குள் அவனிடம் 7.50 டாலர்கள் சேர்ந்துவிடும். ஒரு டாலருக்கு ஏதாவது வாங்கி சாப்பிட்டுவிட்டு 6.50 டாலர்களை சேமிக்கத் தொடங்கினான்.

பள்ளிப்படிப்பை முடித்தபின் அமர்ந்த பகுதிநேர வேலையில் அவனுக்குக் கிடைத்ததோ ஒரு மணிநேரத்திற்கு 5 டாலர்கள் சம்பளம். ஒரு கோல்ஃப் மைதானத்தின் அருகிருந்த குளம் குட்டைகளில் தேடி பயன்படுத்தப்பட்ட கோல்ஃப் பந்துகளைப் பொறுக்கி கடையில் விற்பான் அந்தச் சிறுவன். இரண்டுமணி நேரத்தில் இப்படி உழைத்தது 50 டாலர்கள்!!

இப்படி இளமைப்பருவம் தொடங்கி விதம் விதமாய் சிந்தித்து, வித்தியாசமாய் உழைத்த இளைஞன்தான், The Spiritual Millionaire உள்ளிட்ட வெற்றிப் புத்தகங்களை எழுதிய புகழ்பெற்ற நிதி ஆலோசகர் கீத் கேமரோன் ஸ்மித்.

ஏதாவது சறுக்கி விடுமோ என்கிற அச்சத்திலேயே சவால்களை ஏற்காமல் சராசரி வாழ்க்கை வாழ்கிறார்கள் மனிதர்கள் என்பது ஸ்மித் சொல்லும் குற்றச்சாட்டு.

புதிய வாழ்க்கை வேண்டு மென்றால் புதிய சவால்கள் வேண்டும்தானே! ஆன ால் விளைவைத் தெரிந்து கொள்ளாமல் எப்படி இற ங்குவது? "அச்சத்தை அறிவுகொண்டு வெல்லுங்கள்" என்கிறார் ஸ்மித்.

ஏதாவதொன்று பற்றி நமக்குத் தெரியாவிட்டால் அந்தப் புதிரைவிட்டு விலகி நிற்கிறோம். ஆனால் அந்தப் புதிருக்கான விடையைத் தேடிக் கிளம்பினால் புதையல் வேட்டை ஆடலாம் என்பது ஸ்மித்தின் சித்தாந்தம்!

நாம் அதிகம் அறிந்திராத தொழில் வாய்ப்போ, முதலீட்டு வாய்ப்போ வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதுபற்றி அதிகம் விசாரிக்காமலேயே "நமக்கெதற்கு வம்பு" என்று நகர்ந்துவிடுபவர்கள் ஏராளம். அது குறித்து நிறைய நிறைய கேள்விகள் கேட்டு, நன்மை தீமைகளை ஆராய்ந்து, விடாமல் விசாரித்து அந்த வாய்ப்பைப் பயன்படுத்துவதன் மூலம் பெரும் ஆதாயத்தை ஈட்டுபவர்கள் மிகச் சிலர்தான்.

சவால்களை சந்திப்பது பற்றி ஸ்மித்திற்கு வழிகாட்டிய ஒரு நிபுணர் உண்டு. அவரது பெயர் நிடோ க்யூபென். அவர் மூன்று கேள்விகளைக் கேட்குமாறு வலியுறுத்துவாராம். எந்த சவாலையும் எதிர்கொள் ளும் முன்பு இந்த மூன்று கேள்விகளுக்கும் விடையிருந் தால் போதும். அதுதான் வெற்றியின் வேதம்.

1. இதனால் நிகழக்கூடிய அதிகபட்ச நன்மை என்ன?

2. இதனால் நிகழக்கூடிய அதிகபட்ச தீமை என்ன?

3. நடைமுறையில் இதில் நிகழப்போவது என்ன?

மிக மோசமாக என்ன நிகழும், யதார்த்தமாக என்ன நிகழக்கூடும் என்ற கேள்விகளுக்கு விடை கிடைத்தாலே ஒன்றில் துணிந்து இறங்கிவிடலாம்.

இந்தக் கேள்விகளுக்கு பதில் தேடத் தயங்குபவர்கள்தான் பழைய வாழ்க்கைக்கு உள்ளேயே புதைந்து கிடந்து புதியவற்றை எதிர்கொள்ளத் தயங்குகிறார்கள்.

இதில் சராசரி மனிதர்களை சாய்க்கும் இன்னொரு விஷயம், "யார் என்ன சொல்வார்களோ" என்கிற அச்சம். எல்லோரும் தன்னை ஏற்றுக்கொள்வதே முக்கியம் என்பது சராசரி மனிதர்கள் பார்வை. "வேலையற்றவர்கள் விமர்சித்தாலும் கவலையில்லை, வெற்றி பெற வேண்டும்" என்பதே சாதனை மனிதர்களின் பார்வை.

வெற்றிக்காக சில சவால்களை எதிர் கொள்வதும், அதில் சில சமயம் சறுக்கினாலும் சில சமயங்களில் நிமிர்வதும் சாதனைப் பாதையில் சகஜமாய் நிகழ்வது.

இந்தத் தெளிவு இல்லாத வர்கள்தான், "மற்றவர்கள் என்ன சொல்வார்களோ" என்ற அச்சத்திலேயே புதியதைத் தொடாமலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

"இருப்பதைக் காப்பாற்றிக் கொள்வோம். இழந்துவிடாமல் வைத்துக் கொள்வோம்" என்பதும் உங்களைப் புதிய திசைகளில் பயணம் செய்ய அனுமதிக்காது. கால்பந்துப் போட்டி நடக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். விளையாடுகிற அணிகள் கோல் போடுவதில் கவனம் செலுத்தாமல் எதிரணிக்கு கோல் விழாமல் தடுப்பதில் மட்டுமே குறியாக இருந்தால் அந்த

தொடர்ச்சி 8ம் பக்கம்...

7ம் பக்கத் தொடர்ச்சி...
ஆட்டமே ஆட்டம் கண்டுவிடும்.

கோல் விழுவதைத் தடுப்பதில் மட்டுமல்ல, கோல் போடுவதிலும்தான் வெற்றி இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் போது புதிய இலக்குகள், புதிய வெற்றிகள் உருவாகின்றன.

பாம்பு சட்டையை உரிக்கிற போது அதன் தோல் ஏற்கனவே மாறியிருக்கிறது. உங்களுக்குள் புதிய வாழ்க்கை முறையை, புதிய கனவுகளை, புதிய இலட்சியங்களை உருவாக்கிக் கொள்வீர்களென்றால் பழைய சட்டை தானாகவே உரிந்து போகும்.

பலருக்கும் பழைய பழக்கங்களை விடுவது என்கிற எண்ணமே ஏற்படாத போது புதிதாக எதையாவது என்கிற எண்ணமே சிந்தனை தோன்றவே வாய்ப்பில்லை.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே டைனோசர் என்ற விலங்கினம் அழிந்தது என்று படித்திருக்கிறோம். அந்த டைனோசர்கள் உயிரோடிருந்த காலங்களிலேயே இருந்த பல உயிரினங்கள் இன்றைக்கும் உயிர் வாழ்கின்றன.

சுறா, நண்டு போன்றன எல்லாமே டைனோசர் காலத்தியவை. ஆனால், காலமாற்றங்களுக்கேற்ப தங்களை மாற்றிக் கொள்ள அவை தயாரான தாலேயே இன்றும் அந்த உயிரினங்கள் உலவுகின்றன.

பணபலம் இருப்பவர்கள் மட்டுமே வளமாக வாழ முடியும் என்கிற பழைய பார்வையை உடைத்துவிட்டு, தங்களை உரிய நேரத்தில் மாற்றிக் கொள்பவர்களே மாற்றம் காண்கிறார்கள். முன்னேற்றமும் காண்கிறார்கள்.

பழைய வாழ்க்கை முறையை உதற வேண்டும், புதிய வாழ்க்கை உருவாக வேண்டும் என்கிற உணர்வு உங்களை உண்மையிலேயே உந்தித் தள்ளுகிறதா? இந்த நான்கு விஷயங்களில் நன்றாக கவனம் செலுத்துங்கள்.

**1. விளைவுகளில் கவனம் குவியுங்கள்:**

நீங்கள் செய்யும் செயல்களில் என்ன விளைவு ஏற்பட வேண்டுமென எண்ணுகிறீர்களோ, அதனை அடைவதில் உங்கள் கவனத்தைக் குவியுங்கள்.

**2. நேரத்தின் மதிப்பை உணருங்கள்:**

உங்கள் நேரத்தின் மதிப்பு அளவிட முடியாதது. எல்லோருக் கும் தரப்பட்டுள்ள இருபத்து நான்கு மணி நேரம்தான் உங்களுக்கும் தரப்பட்டுள்ளது.நேரத்தின் மதிப்பறிந்து அதனைப் பயன்படுத்துபவர்கள் உரிய உயரங்களைத் தொடுகிறார்கள். உழைக்கும் நேரத்தை வீணடிப்பது மட்டுமல்ல, ஓய்வுக்குரிய நேரத்தை வீணடிப்பதுகூட நேரத்தின் மதிப்பை உணராமையின் அடையாளம் தான் என்பதை மறவாதீர்கள்.

**3. முதலிடம் எதற்கென்று முடிவெடுங்கள்:**

எல்லோருக்கும் நிறைய வேலை இருக்கத்தான் செய்கிறது. ஆனால் எந்த வேலைக்கு முதலிடம், எதற்கு இரண்டாமிடம் என்று நிரல்பட ஒதுக்கிக் கொள்ளத் தெரிந்தவர்கள் பதட்டமில்லாமல், தங்கள் வேலைகளைத் திட்டமிட்டு நடத்துகிறார்கள். இந்த சூட்சுமம் தெரியாதவர்கள் எல்லாவற்றையும் இழுத்துப் போட்டுக்கொண்டு எங்கே தொடங்குவது, எங்கே முடிப்பது என்று தெரியாமல் தடுமாறுகிறார்கள்.



**4. திறம்பட செயல்படுங்கள்:**

உடலளவிலும், மன தளவிலும் தயார் நிலைக்கு வந்த பிறகே செயல்படத் தொடங்குங்கள். ஒரு வேலையை சீராக - சிரத்தையாக - சரியாக - சாமர்த்தியமாக செய்து முடிப்பதுதான் சாதனையாளர்களின் அணுகு முறை. மனதளவில் தயாராகவும் உற்சாகமாகவும் உங்களை வைத்திருந்தால் செயல் திறமை தானாக வெளிப்படும்.

விதித்தபடி வாழ்க்கை, வழக்கம் போலவே வாழ்வது என்கிற வழக்கங்களை உடையுங்கள். புதுமைகள் தேடுங்கள்! புதுவாழ்வு வாழுங்கள்! புது வெளிச்சம் காணுங்கள்!

• • • • • • • •

# இரசிகர்களைக் கொள்ளை கொண்ட செல்வன் அரவிந்த் குகேந்திரனின்
# மிருதங்க அரங்கேற்றம்



குருவுடன் செல்வன் அரவிந்த் குகேந்திரன்

சென்ற 24.09.2011 சனிக்கிழமை யன்று ரொறன்ரோவிலுள்ள Chinese Cultural Centre ஆனது ஓம் ஸ்ரீ சாயி கான சபா மண்டபமாகவே அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. இளம்தலைமுறை கலைஞர்களில் முன்னோடியாக விளங்கி வரும் மிருதங்க ஜோதி, இசைக்கலாபாரதி, சுஜீந்தர் தர்மலிங்கம் அவர்களின் பாரம்பரிய வழியில் மிருதங்கக் கலையினை கற்று கொண்ட இவர் ஸ்ரீ சாயி வேலவன் சரண கமல அர்ப்பணம் செய்து விழாவினை ஆரம்பித்ததுடன் சிறிது நேரத்திற்குள்ளேயே மண்டபம் நிறைந்து காணப்பட தமது வித்துவத் திறனை வெளிப்படுத்தியபோது அனைவரும் மெய்மறந்து இவரது மிருதங்க இசையை இரசித்தனர்.

காமகோடி பீட ஆஸ்தான வித்துவான் வயலின் இசைவேந்தன் முல்லைவாசல் G.சந்திரமௌலி அவர்களது வயலின் இசையுடன் சபாஷ் போடும்படியாக செல்வன் அரவிந்த் குகேந்திரன் சளைக்காமல் மிருதங்கம் வாசித்தமை செல்வனின் திறமையை மிகவும் பெருமையுடன் எடுத்துக் காட்டியது மட்டுமல்லாமல், குருபக்தியுடன் கற்றுக் கொண்ட இளம்வித்துவானாக உயர்த்தி நின்று அரங்கேறியமை அவர் ஆற்றலை நிரூபிப்பது போல் அமைந்தது.

அத்துடன் அரவிந்த் குகேந்திரனின் கான சபாவானது அவரின் வயதொத்த இளம் வித்துவக் கலை பக்கவாத்தியங்கள் சபையினர் அனைவராலும் கவரப்பட்டது இன்றைய இளைய தமிழ் தலைமுறையினரில் கலையார்வம், தம்மகத்தே கொண்டுள்ள ஆற்றல், பெருமைகளை எடுத்துக் கூறி நின்றன.

இடைவேளைவரை தாள வாத்தியங்கள் விரல்களோடு கலைக்களிநடம் புரிந்தன. சபையினர் மெய்மறந்து உற்சாகமாகக் கைதட்டிப் பாராட்டினை வெளிப்படுத்திய வண்ணம் இருந்ததை அவதானிக்க முடிந்தது.

சிறப்பு விருந்தினராக கலந்து கொண்ட சட்டத்தரணியும், கனடா தமிழிசைக் கலா மன்றத் தலைவருமான தம்பையா ஸ்ரீபதி அவர்கள் உரையாற்றுகையில், இசைக்கலைக்கே உரித்தான சிறப்பு வார்த்தைகளினால் செல்வனின் ஆற்றல்களை எடுத்துரைத்து வாழ்த்தினைத் தெரிவித்தார்.



அடுத்து அரவிந்த் குகேந்திரனின் குருவின் குருவான மிருதங்க க்ஷேஸ்திர அதிபர் மிருதங்க ஞானவாருதி ஸ்ரீ வாசுதேவன் இராஜலிங்கம் அவர்கள் கௌரவ விருந்தினராக அழைக்கப் பட்டிருந்தபோதும் தவிர்க்க முடியாத நிலையில் கலந்துகொள்ள முடியாதிருந்தமையினால் அவரது பாரியார் திருமதி சோபனா வாசுதேவன் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்துக் கௌரவிக்கப்பட்டார்.

இடைவேளையின் பின் மீண்டும் உற்சாக மாகவும், தன்னம்பிக்கை, துணிவு, ஆற்றல் வெளிப்பாட்டுடனும் மிருதங்க இசையை வழங்கிய அரவிந்த் ராகம் தாளம் பல்லவி, மற்றும் எப்பவருவாரோ போன்ற பாடல்களுக்கு கலைவிளங்க வாசித்தமை மிகவும் பாராட்டுக்குரியது. சிறந்தவொரு இந்திய வயலின் வித்துவ இசைவேந்தருக்கு தமது ஆற்றலை வெளிப்படுத்திய இச்செல்வன் புலம்பெயர் தமிழ் உறவுகளுக்கும் பெற்றோர்க்கும் தனக்கும் நிகரிலா பெருமையைத் தேடித்தருகின்ற ஓர் இளங் கலைஞன் ஆவார்.

இவரது தன்னம்பிக்கை, துணிவு, கலையாற்றல் முதலியன எடுத்துக் காட்டி நிற்கும் விதமாக மிக இயல்பாக வாசித்தமை வளரும் இவர் போன்ற இளம் கலைஞர்களுக்கு மேலும் ஊக்கத்தினைக் கொடுக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

அனைத்து இசைக் கலைஞர்களின் இசை வெள்ளத்தில், நிகழ்ச்சி நிறைவுபெறும் வரை அரங்கு நிறைந்த ரசிகர்கள் கண்டு, கேட்டு மகிழ்ந்ததோடு, மங்களவாத்தியத்துடன் விழா இனிதே நிறைவேறியது.

– அபிரா



# முத்தமிழ்க் கலைமன்றம் வழங்கிய
# தீர்க்க சுமங்கலி
## இசை நாடகம்

செப்ரெம்பர் மாதம் 17ம் திகதி சனிக் கிழமையன்று முத்தமிழ்க் கலைமன்றத்தினரின் முத்தமிழ்க் கலைவிழா, காடினல் நியூமன் கத்தோலிக்கப் பாடசாலையில், பேராசிரியர் கா. சிவத்தம்பி அரங்கில் சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவின் முக்கிய நிகழ்ச்சியாக, தீர்க்கசுமங்கலி என்ற இசை நாடகம் நடைபெற்றது. சிறப்பாக அரங்கிலே நடித்துக் காட்டப்பட்ட இந்த நாடகம் என் மனதில் ஏற்படுத்திய உணர்வுகளை விமர்சனமாகத் தருகின்றேன். எனது வெளிப்பாடுகள் 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது போலத்தான் இருக்க வேண்டுமெனும் அவசியமில்லை.

விழாவானது இரண்டு பகுதிகளைக் கொண்டிருந்தது. முதலாவது பகுதியில் உரைகள், மதிப்பளித்தல் என்பன நடைபெற்றன. விழா ஆரம்பத்தில், மறைந்த பேராசிரியர் கா. சிவத்தம்பிக்காக, அவரது படம், மதிப்புக்குரியவர்களினால் மாலையிடப்பட்டு, குத்துவிளக்கேற்றப்பட்டு அரங்கு திறந்து வைக்கப்பட்டது.

பின்னராகத் தொடக்க நிகழ்சிகளும், வல்லுனர்களின் நிறைகுடம் போன்ற உரைகளும் நடந்தன. சபையோரை இவ்வுரைகள் நிறைவு கொள்ளச் செய்ததை அவதானிக்கக் கூடியதாக இருந்தது. பின்னர் மூத்த கலைஞர்கள் கௌரவிக்கப்பட்டு அனுசரணையாளர்களும் மதிப்பளிக்கப்பட்டார்கள். இரண்டாவது பகுதியாக இசைநாடகம், இடைவேளை இன்றி ஆரம்பமாகியது. இசை, நாடகம், நாட்டியம் என்பவற்றில் அனுபவமும் தேர்ச்சியும் பெற்ற பலர் இருந்த அரங்கத்தில் தீர்க்கசுமங்கலி இசைநாடகம், அரங்கினரை நிமிர்ந்து இருக்கச் செய்த வண்ணமாக அசத்தலாக ஆரம்பமாகியது. சத்தியவானும் சுமாலியும் குதிரையில் வருவது அவையோரையும் ஏதோ குதிரையில் அமர்ந்திருப்பது போன்ற உணர்வுக்குள் கொண்டு சென்றது. இதற்கு இசை வழங்கிய இசைக் கலைஞர்கள் இருவரும் பாராட்டப்பட வேண்டியவர்களே.

அடுத்ததாக வந்த சாவித்திரியினதும் தோழிகளினதும் காட்சி, நாடகம் நன்றாகவே செல்லப் போகின்றது என்பதை கட்டியம் கூறிச் செல்ல, துமச்சேன மகராஜனும், துணைவியாரும் தோன்றி சபையினரை தங்களின் ஆற்றலினால் ஈர்த்துக் கொண்டனர். இவ்விதம் எல்லாக் காட்சிகளுமே சபையினரைக் கவர்ந்து கொண்டன நாரதர், எமதர்மராஜன், கிங்கரர்கள், சித்திரகுப்தன், பாவிகள் என 29 பாத்திரங்கள் கொண்ட இந்த இசைநாடகத்தில் ஒவ்வொருவரும் தத்தமது பாத்திரங்களில் சிறப்பாக ஒட்டிக் கொண்டதே நாடகம் இவ்வளவு சிறப்புறக் காரணம்.

கடந்த மூன்று மாதங்களில் சலியாத பயிற்சியின் வெளிப்பாடு நன்றாகவே தெரிந்தது. எல்லோருமே சபையினரைக் கவர்ந்து கொண்டா லும், நாரதர் பலரினதும் பாராட்டைப் பெற்றுக் கொண்டார். உடல்வாகு, தோரணை, தமிழ் உச்சரிப்பு என்பன மிகப் பொருத்தம் என்றார்கள். நாடகம் முழுவதும் தூய தமிழின் ஒலிப்பைக் கேட்கக் கூடியதாக இருந்தது. இது மனதுக்கு இதமாகவும் இருந்தது. சாவித்திரியும் எமதர்மனும் நாடகத்தை விறுவிறுப் பாக எடுத்துச் சென்றமை மிகச் சுவாரசியமாக அமைந்தது.

தரமான பாடல்கள், கச்சிதமான பாத்திரத் தேர்வுகள், சபையினரைக் கவரும் வண்ணமான நடன அசைவுகள், பொருத்தமான ஒப்பனை, நாடகத்தினைத் தொய்வின்றித் தொடர்ச்சியாய் நகர்த்தியமை போன்ற உத்திகளினால் நாடகம் சபையினரைத் தம்முடன் கட்டிக் கொண்டது. இருப்பினும் ஒருசில தளம்பல்களும் தெரியத்தான் செய்தன. குறிப்பாகப் பாடல்களில் சில தொய்வுற்றுக் கேட்டன. வாத்தியக் கலைஞர்கள் இவற்றைச் சரி செய்ய முயற்சித்தாலும் ஒருசில இடங்களில் அவை வெளிப்படத்தான் செய்தன.

நாரதரும் எமனும் சந்திக்குமிடத்தில் காரசாரமான தொனியும் அசைவுகளும் இருந்திருந்தால் சுவை மேம்பட்டிருக்கும். அங்கு இசையழகுதான் அதிகம் தொனித்தது. இதற்கு, இசை வரம்புக்குள் அவர்கள் நின்றதுதான் காரணமோ தெரியவில்லை. பலசுவைகளையும் நாடகத்தில் காட்டியிருந்தாலும் நகைச்சுவையை இன்னமும் அதிகமாக்கியிருக்கலாம். அதற்கான இடங்களும் இருந்தன. எப்படியிருப்பினும், நாடகத்தின் நேர்த்தியானது, இச்சிறுசிறு விலகல்களை எல்லாம் முற்றாக மறைத்து விட்டது என்றே கூறவேண்டும்.

கலைஞர்களின் கௌரவிப்புடன் விழா நிறைவு பெற்றது. கலைஞர்களை சபையோர் நேரடியாகச் சென்று பாராட்டியது மனதுக்கு குளிர்ச்சியாக இருந்தது. இரவு 11 மணியாகிய வேளையிலும் சிலர் மனநிறைவு காரணமாக, முக மலர்ச்சியுடன் அரங்கில் நின்றதைக் காணக் கூடியதாக இருந்தது. முத்தமிழ்க் கலைமன்றத்தினர் இது போன்ற தரமான நிகழ்ச்சிகளை எதிர்காலத்திலும் தரவேண்டும். தருவார்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

- இசை நாடக இரசிகர்கள் சார்பில்
கனி விமலநாதன்.










கலை வாரிசுகளின்

# இசை அர்ப்பணமும், பரதநாட்டிய சலங்கைப் பூஜையும்



உலகில் வாழ்கின்ற உயிரினங்கள் அனைத்தும், இயற்கையின் அசைவுகளுடனும், இயற்கையின் சத்தத்துடனும் இணைந்து, மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருவது கண்கூடு. பகுத்தறிவு கொண்ட உயிரினங்களாகிய மனிதன் இவ்வியற்கை அசைவுகளை, கலைவடிவமாக்கி பலவகைப்பட்ட கலைகளை உருவாக்கி மனிதன் மனிதப் பண்புடன் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழிகாட்டி வருகின்றான். இவ்வரிய கலைகளில் குறிப்பித்தக்கவற்றை தம் சிறு பருவம் வரை பயின்று சிறந்த அரங்க நிகழ்வாகச் சமர்பித்த செல்வன் ஆகாஸ் கதிர்காமன், செல்வி அஸ்வினி கதிர்காமன் ஆகியோர் பாராட்டப்பட வேண்டியவர்கள். செப்ரெம்பர் மாதம் 3ம் திகதி யோர்க்வூட் நூலகக் கலையரங்கில் இடம்பெற்ற இசை அர்ப்பணமும், பரதநாட்டிய சலங்கைப் பூஜையும் என்ற கலை நிகழ்வு வரவேற்புரையுடன் ஆரம்பமாகியது.

வரவேற்புரையினை செல்வன் மனேச் பகீரதன் சிறந்த முறையில் எடுத்துச் சென்றார். நிகழ்வினைத் தமிழில் திருமதி யசோதா சிவானந்தனும், செல்வி மினோயா மகேந்திரதாசனும், மிகவும் தெளிவாகவும், அளவாகவும் சிறந்த முறையில் முன்னெடுத்துச் சென்றனர். தொடர்ந்து மங்களவிளக்கேற்றல், தமிழ்த் தாய் வாழ்த்து, கனேடிய தேசிய கீதம் , மௌன அஞ்சலி என்பன இடம்பெற்றன. தொடர்ந்து சிறப்பு நிகழ்வாக சமர்ப்பணம் இடம்பெற்றது. இச்சமர்ப்பண நிகழ்வில், விழாநாயகர்களின் தாத்தா பரியோவான் கல்லூரி முன்னாள் ஆசிரியரும், யாழ் பரமேஸ்வராக்கல்லூரி முன்னாள் ஆசிரியரும், கனடா முதியோர் சங்க முன்னாள் தலைவருமான அமரர் திரு. சுப்பையா தர்மலிங்கம் அவர்களுக்கும், பெரியதாயார் யாழ் சென் ஜோசப் மகாவித்தியாலய முன்னாள் இசை ஆசிரியையும், கொழும்பு சைவ மங்கையர்கழக முன்னாள் இசை ஆசிரியையுமாகிய அமரர் திருமதி. அமிர்தாஞ்சனா சுரேஸ்வரன் அவர்களுக்கும் இந்நிகழ்வு சமர்ப்பிக்கப்பட்டு நினைவுச்சுடர் ஏற்றப்பட்டது. நினைவுச்சுடரினை திருமதி. கமலாம்பிகை தர்மலிங்கம் அவர்களும், திரு. திருமதி. கனகேந்திரம் அவர்களும், ஏற்றி வைக்க செல்வன். ரதீஸ் சிவானந்தனும் செல்வி. சௌமியா சந்துருவும், சமர்ப்பண உரையினை வழங்கினர். இருவருமே தமிழிற்கு முதலிடம் கொடுத்துத் தமிழிலும், ஆங்கிலத்திலும், சமர்ப்பண உரையினை மறைந்த குடும்ப உறுப்பினர்களுக்குச் சமர்ப்பித்தனர். தொடர்ந்து அரங்க பூஜை இனிதே நிறைவேறியது.

தொடர்ந்து 11வயது சிறுவன் செல்வன் ஆகாஸ் கதிர்காமனின் இசை அர்ப்பண நிகழ்வு ஆரம்பமாகியது. சதா கான நிலைய அதிபர் இசைக்கலைமணி, இசைக்கலாவித்தகர் திருமதி பவானி ஆலாலசுந்தரம் அவர்களிடம், இசை பயிலும் இம்மாணவன் சிறந்த முறையில் தனது இசை நிகழ்வினைச் சமர்ப்பித்தார். வர்ணம் தொடக்கம் தில்லானா, திருப்புகழ் வரை பதின்நான்கு பாடல்களை எவ்வித எழுத்து வடிவங்களுமின்றி மனனம் செய்த நிலையில் சிறந்த தமிழ் உச்சரிப்புடன் பாடியது எல்லோர் மனதினையும் தொட்டது. பாடல்களின் தெரிவும், மாணவனின் குரல் வளமும், சபையினரை மெய் சிலிர்க்க வைத்தது. இராகம், கற்பனா சுரங்கள், சங்கதிகள் என அனைத்துமே ரசிக்கக்கூடிய வண்ணம் இருந்தது. குறிப்பாக மயில் மீது விளையாடும் வடிவேலனே, தந்தை தாய் இருந்தால், அலைபாயுதே கண்ணா, குறை ஒன்றும் இல்லை, சின்னஞ்சிறு கிளியே போன்ற பாடல்கள் சபையோரை மிகவும் கவர்ந்தது.

செல்வன் ஆகாசின் இசை அர்ப்பண நிகழ்வுவினைத் தொடர்ந்து. சிறப்பு இசை நிகழ்ச்சி வழங்கிய செல்வி அஸ்சினி கதிர்காமனை துடிப்புமும், நிமிர்ந்த இருக்கை நிலையும், சபைக் கூச்சமின்றி பாடிய திறனும், பாராட்டப்படக் கூடியது. தொடர்ந்து இசைநிகழ்வின் பிரதம அதிதியாக வருகை தந்திருந்த திரு. குரு அரவிந்தன் அவர்கள், இளம் தலைமுறையினர்களுக்கு கலைகளின் முக்கியத்துவம் பற்றியும், அதில் பெற்றோரின் பங்களிப்புப் பற்றியும், உரையாற்றினார். அதனைத் தொடர்ந்து இசை ஆசிரியை திருமதி பவானி ஆலாலசுந்தரம் அவர்களின் 35 வருட கலைச்சேவையினைப் பாராட்டி அமிர்தாலயா நுண்கலைக்கல்லூ ரியினால் 'இன்னிசைவாணி' என்று பட்டமளித்துக் கௌரவிக்கப்பட்டது. இதனை திரு திருமதி குரு அரவிந்தன் அவர்கள், வழங்கினர். அத்துடன் இவ்விரு சிறுவர்களாலும், எம்மைப்பாட வைத்தாய் குருவே பவானி என்ற கானமும் சமர்ப்பிக்கப்பட்டது.

தொடர்ந்து இவ்விரு மாணவர்களும், மிகவும் குறுகிய காலத்தில் திருமதி தயாளினி இரவிச்சந்திராவை குருவாகக் கொண்டு தாம் கற்ற வீணை இசையினைத் தனித்தனியே அரங்கில் திறமையாகச் சமர்ப்பித்தனர் . அதனைத் தொடர்ந்து செல்வன் ஆகாஸ் கதிர்காமனின் மிருதங்க இசை இடம்பெற்றது. செல்வன் ஆகாசின் மாமனாரும் குருவுமான மிருதங்கக் கலாவித்தகர் திரு கனகேந்திரம் குகேந்திரனின் வழிநடத்தலில் மிருதங்கக்கச்சேரி மிகவும் சிறப்பாக இடம்பெற்றது. இதற்கு ஆகாசின் சகோதரிகள்,

தொடர்ச்சி 13ம் பக்கம்...











# கனேடியத் தமிழர் வர்த்தக சம்மேளனத்தின் 4வது ஆண்டு Golf Classic நிகழ்வு

கனேடியத் தமிழர் வர்த்தக சம்மேளனத்தின் (CTCC) 4வது ஆண்டு Golf Classic நிகழ்வு கடந்த செப்ரெம்பர் மாதம் 7ம் திகதி நியூமார்க்கட் இல் அமைந்துள்ள Silver Lakes Golf and Country Club இல் நடைபெற்றது.

இந்த நிகழ்வில் பல தமிழ் வர்த்தகப் பிரமுகர்கள் ஆர்வத்தோடு பங்குபற்றி இதன் மூலம் கிடைத்த நிதியை The Scarborough Hospital Foundation நிறுவனத்திற்கு CTCC நன்கொடையாக வழங்கினார்கள்.

மேற்படி நிகழ்வுக்கு பிரதான அனுசரணையாளர்களாக RBC, TD, Scota Bank, CIBC, Industrial Alliance, The Cable Shoppe, The Co-operators, Liland Insurance, Gary Anandasangaree, Meleni David ஆகியோர் பங்குபற்றினார்கள். மற்றும் ஏனைய நிறுவனங்களும் இந் நிகழ்ச்சிக்கு ஆதரவு வழங்கிச் சிறப்பித்தார்கள்.

இந்த நிகழ்வின் Hole-in-one prize ஆக Town and Country BMW நிறுவனத்தின் புதிய BMW (with 2 year lease) வழங்கியிருந்தும் ஒருவரும் அதனை வென்றெடுக்க முடியவில்லை. இவ் விளையாட்டின் முதல் இடத்தினை Team NJ தட்டிக்கொண்டு வெற்றிக் கிண்ணத்தையும் பெற்றது.

விளையாட்டு முடிவில் CTCC இன் தலைவர் திரு. மைக் அகிலன், The Scarborough Hospital Foundation நிறுவன அதிபர் திரு. மைக்கல் மாஸா ஆகியோரின் உரையோடு இராப்போசனதுடன் இனிதே நிறைவடைந்தது.





















தமிழ் கனேடிய விளையாட்டுச் சங்கம் ஆண்டு தோறும் நடாத்தும் உதைபந்தாட்டச் சுற்றுப் போட்டி இவ்வருடம் செப்ரெம்பர் மாதம் 10 திகதி L'Amoreaux Park இல் இடம் பெற்றது. மேற்படி விழாவில் எடுத்த படங்களே இங்கு காண்கிறீர்கள்.

# வேலையில் மாற்றம் வேண்டுமா?



வந்த வேலையைச் செய்கிறேன் என்பது ஒருவகை. எந்த வேலையும் செய்யலாம் என்பது இன்னொருவகை. எனக்குப் பிடித்த வேலையைத்தான் செய்கிறேன் என்பதே அபூர்வமான வகை. இந்த மூன்றாவது நிலையை மகிழ்ச்சியுடன் தொடுவதில்தான் முன்னேற்றத்தின் முழுமை இருக்கிறது.

எல்லோருமே தாங்கள் விரும்பிய வேலையைச் செய்ய வேண்டும் என்றுதான் ஆரம்பத்திருந்தே ஆசைப்படுகிறார்கள். ஆனால் அவர்கள் மேற்கொள்ளும் முயற்சி மலராத போது வாழ்வின் பாதுகாப்புக்கருதி வேறு வேலைக்குச் செல்கிறார்கள்.

தூண்டில் முனையைத் தண்ணீரில் போட்டுவிட்டு, மீனுக்குக் காத்திருக்கும் மீனவர்போல் வேறு வேலையில் இருந்து கொண்டே தங்களுக்கு விருப்பமான துறையில் நுழையக் காலம் பார்த்துக் காத்திருப்பவர் மிகச் சிலர் மட்டுமே. பலரும், தங்கள் கனவு கருகி விட்டதாகவே முடிவு செய்துகொண்டு அந்த அதிருப்தியை அடக்கிக் கொண்டே அரைமனதோடு தங்கள் வேலையில் ஈடுபடுகிறார்கள்.

இந்த அதிருப்தியின் அழுத்தம் தாங்காமல் ஏதாவது செய்தாக வேண்டும் என்ற தீர்மானத்தில் புதிதாய் முயன்று நினைத்ததை முடிப்பவர்கள் சிலர்தான்.

அவர்களே மற்றவர்கள் மனதில் கொள்ளத்தக்க முன் மாதிரிகள். தங்கள் மனதில் எழுந்த விருப்பமும் வேலை பற்றிய கனவுகளும். வேலை பற்றிய கனவுகள் எதிர்பாராமல் ஏற்பட்ட ஒன்றல்ல என்பதை உணர்ந்த காரணத்தால் முனைப்புக் குறையாமல் முயன்றவர்கள் அவர்கள். வேலையில் மாற்றம் வேண்டும் என்கிற எண்ணமோ ஏக்கமோ தீவிரமாக ஏற்படுகிறதென்றால் விருப்பமான துறையில் சாதிக்க வேளை பிறந்துவிட்டதாகவே அர்த்தம். அதே இடமா. அதே துறையா, சொந்தத் தொழிலா என்பது உட்பட எல்லாவற்றையும் ஆராய வேண்டிய நேரமிது.

இதற்கு மிகச்சரியான வழி, தகவல்கள் திரட்டுவது. விருப்பமுள்ள துறை குறித்த செய்திகளைப் புத்தகங்கள் இணைய தளங்கள் உட்பட வெவ்வேறு வகைகளில் திரட்டுவது மிகவும் பயன்தரும். மிக நெருக்கமானவர்களிடம் இது குறித்துக் கலந்து பேசுவதும் அவசியம், எதிர்பாராத இடங்களில் இருந்தும்கூட பயன்மிக்க ஆலோசனைகளோ, வழிகாட்டுதல்களோ உங்களுக்குக் கிடைக்கக்கூடும்.

இயல்பாகவே, புதிய துறையில் ஈடுபடுவதென்று முடிவு செய்துவிட்டால் கலர்கலராய்க் கனவுகளும், மின்னல் வேக வளர்ச்சி குறித்த ஆசைகளும் அரும்புவது இயல்புதான். ஆனால் எட்டக்கூடிய இலட்சியங்களின் பட்டியல் ஒன்றைத் தயார் செய்து கொள்வது மிகவும் முக்கியம். குறுகியகால - நீண்டகால இலட்சியங்களைப் பகுத்துக்கொள்வதன் மூலம் எதற்கு முதலிடம், எதை எப்படி செய்வது என்பது போன்ற எத்தனையோ விஷயங்களை உங்களால் வரையறுத்துக் கொள்ளமுடியும்.

இந்த இலட்சியங்களுக்கு எப்போது எப்படி செயல்வடிவம் கொடுக்கப் போகிறீர்கள் என்பதும் முக்கியம். விரும்பியதைச் செய்யுங்கள். விபரமாகச் செய்யுங்கள். வெற்றிகரமாகச் செய்யுங்கள்.

• • • • • • • •

# மிஸிஸாகா பீல் தமிழ் முதியோர் சங்கத்தின்
# வருடாந்த 9வது நடைபவனி

கடந்த செப்ரெம்பர் 24ம் திகதி சனிக்கிழமை மிஸிஸாகா பீல் தமிழ் முதியோர் சங்கத்தின் வருடாந்த 9வது நடைபவனி காலை 10.30 மணிக்கு Yarl Co-op Building,
2584 Rugby Road, Mississauga இல் இருந்து ஆரம்பமாகி Dundas, Hurontario, Queensway, Confederation வழியாக வந்து காலை 11.30 மணியளவில் யாழ் கூட்டுறவுக் கட்டிடத்தை வந்தடைந்தது.

இந் நடைபவனியில் பங்குபற்றி யோருடன் சங்கத்தின் தலைவர் திரு. சின்னப்பு சந்தியாபிள்ளை உட்பட Mississauga - Erindale MPP யான Hon. Harinder Thakhar அவர்களும் Mississauga - East Cooksville Liberal Candidate Ms. Dipika Damerla, Ms. Ashlee Sorochan - Manager of events - Credit Valley Hospital ஆகியோரும் பங்குபற்றிச் சிறப்பித்திருந்தனர்.

இந் நடைபவனியின் போது சேகரித்த நன்கொடை நிதியின் ஒரு பகுதியை பீல் பகுதி வைத்தியசாலைகளுக்கும் மற்றும் மனித உரிமை மீறல்களால் பாதிக்கப்பட்ட மக்களுக்கும் சென்றடைய ஒழுங்குசெய்யப் பட்டது.







11ம் பக்கத் தொடர்ச்சி...

செல்வி ஐஸ்வரியா சந்துரு, செல்வி அபிநயா சந்துரு, செல்வி சௌமியா சந்துரு, ஆகியோர் முறையே குரலிசை, வயலினிசை, தம்புரா இசை என்பவற்றை மிகவும் சிறந்த முறையில் நேர்த்தியாக வழங்கினர். இதற்கு கலைக்கோவில் மாணவர்களான செல்வன் கரீஸ் சிவன்ரூபன் கடம் வாசித்தும், செல்வன் சஞ்சீவன் செல்வநாதன் மோர்சிங் வாசித்தும் மெருகூட்டினர். மிருதங்க கச்சேரியின் அனைத்து உருப்படிகளும் சிறந்த முறையில் அமைந்திருந்தாலும், வள்ளிக் கணவன் எனும் காவடிச் சிந்து பாடலும் அதற்கு சிறுவன் ஆகாஸ் தனை மறந்து வாசித்த மிருதங்க இசையும், அவையினர் எழுந்து நின்று கரவொலி செய்து பாராட்டினர்.

இதனைத் தொடர்ந்து செல்வி அஸ்வினி கதிர்காமனின் பரதநாட்டிய சலங்கைப் பூஜை சம்பிரதாய பூர்வமாக சலங்கை அணிவித்து ஆரம்பமாகியது. தோடயமங்களம், புஸ்பாஞ்சலி, அலாரிப்பு, ஜதீஸ்ரம், நவரசம், கவுத்துவம், கீர்த்தனம், பதம், குறத்தி, தில்லானா, மங்களம் எனச் சிறப்பாக முன்னெடுத்துச் செல்லப்பட்ட பரதநாட்டியக் கச்சேரியில் நவரசம், எங்கும் உன் ஆடலம்மா எனும் கீர்த்தனம், குறத்தி நடனம் என்பன குறிப்பிடத்தக்க விதத்தில் மிகவும் சிறப்பாக இருந்தது. பார்வையாளர்களின் கரவொலியின் மத்தியில் சிறிய தாரகை போன்று அரங்கில் பிரகாசித்தாள் ஏழு வயதுச் சிறுமி அஸ்வினி. நவரசத்தை இச்சிறுமி உணர்ந்து செய்த விதம் மிகவும் பாராட்டக்கூடியது. தனது தாயார் ஸ்ரீமதி லலிதாஞ்சனா கதிர்காமனை குருவாகக் கொண்ட செல்வி அஸ்வினி தனது அரங்க சலங்கைப் பூஜையினை சிறப்பாக நிறைவு செய்தார்.













தொடர்ந்து நடன நிகழ்வின் பிரதம விருந்தினராக கலந்து சிறப்பித்த திருமதி கோதை அமுதன் அவர்கள் செல்வியின் வயதிற்கு மீறிய திறனையும் அதனைச் சிறப்பாகக் கற்பித்த தாயாரும், குருவுமாகிய ஸ்ரீமதி லலிதாஞ்சனா கதிர்காமனின் திறமையினையும் வர்ணித்தார். இந்நிகழ்வில் கலந்து கொண்டு சிறப்பித்த திரு. திருமதி சாய்ராம் அவர்கள் மாணவர்களுக்கு ஆசி வழங்கினர். அதனைத் தொடர்ந்து கலைஞர்கள் கௌரவிக்கப்பட்டதுடன் அவ்விரு மாணவர்களும் கற்ற சபை முன்னிலையில் சான்றிதழும், கேடயமும் வழங்கி கௌரவிக்கப்பட்டனர். கலையில் தம் திறமையைக்காட்டிய இம்மாணவர்கள் நன்றியுரையை தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறப்பாக வழங்கி அனைவரினது உள்ளத்தினையும் மகிழ்வித்தனர்.

இசை ஆசிரியை திருமதி பவானி ஆலாலசுந்தரம், நடன ஆசிரியை ஸ்ரீமதி லலிதாஞ்சனா கதிர்காமன், மிருதங்க ஆசிரியர் ஸ்ரீமான் கனகேந்திரம் குகேந்திரன், வீணை ஆசிரியை ஸ்ரீமதி தயாளினி இரவிச்சந்திரா அனைவரிடமும் தாம் கற்ற கலைவடிவங்களை ஒரே அரங்கில் தொகுத்து வழங்கிய இச்சிறார்களின் உழைப்பும் இவ்வாசிரியர்களினதும் உழைப்பும், ஆறு மணி நேர நிகழ்வாக பிரமாணித்தது. எவ்வித சலிப்புமின்றி ஒரு வித்தியாசமான அனுபவமாக இரசிக்கக்கூடிய வண்ணம் இருந்தது குறிப்பிடத் தக்கது.

சிறப்பாக அமைக்கப்பட்டிருந்த நுளைவாயில் அலங்காரம் முதல் அரங்க அலங்காரம் வரை மிகவும் சிறப்பாகவும் தேவைக்கு ஏற்பவும் அமைக்கப்பட்டிருந்தது. இங்கு குறிப்பிடப்படவேண்டியது என்னவெனில் ஒரு கலைக் குடும்பத்தின் அனைத்து வாரிசுகளும் மேடையில் காட்சி தந்தது மிகவும் சிறப்பாக இருந்தது. கலையில் மிகவும் ஈடுபாடு கொண்டவர்கள், ஆகாஸ், அஸ்வினியின் அப்பா வழியினரும், அம்மா வழியினரும் என்பது மண்டபத்தில் கேட்டறிந்தவை. திரு. திருமதி கனகேந்திரம், திரு. திருமதி தர்மலிங்கம் அன்று இலங்கையில் இட்ட கலை விதையானது இன்று கடல் கடந்து இப்புலம் பெயர்ந்த கனேடிய மண்ணில் பெருவிருட்சமாகி விழுது பரப்பி நிற்பதை இவ்வரங்கம் எமக்கு உணர்த்தியது.

அதற்குச் சான்றாக ஒரே மேடையில் திரு கதிர்காமன், திருமதி லலிதாஞ்சனா தம்பதியினரின் பிள்ளைகள் ஆகாஸ், அஸ்வினியினருக்கு திரு. சந்துரு, திருமதி நிறைஞ்சனா தம்பதியினரின் புதல்விகள் ஐஸ்வர்யா, அபிநயா, சௌமியா, மாமனார் ஸ்ரீமான் குகேந்திரன் ஆகியோர் பின்னணி இசைகளை வழங்கிச் சிறப்பிக்க மாமியார் திருமதி யசோதை நிகழ்வினை முன்னெடுத்துச் செல்ல நிகழ்வு இறையருளினால் இனிதே நிறைவேறியது.

- கலைக்குருவி



# காலம் உங்கள் காலடியில் -1

— சோம. வள்ளியப்பன் —

வாரன் பஃபெட் ஐ நீங்கள் அறிந்திருப்பீர்கள். உலகின் நம்பர் 1 பணக்காரராக வெகுகாலம் இருந்தவர். பின்பு அந்த இடத்தினை பில்கேட்ஸ்சுக்கு கொடுத்தவர். பங்குச் சந்தையில் முதலீடுகள் செய்து அசாத்தியமாக உழைப்பவர். அவர் முதன் முதலாக பணம் உழைத்த போது அவருக்கு வயது ஆறுக்கும் குறைவு! அப்போது தொடங்கி, இன்று வரை தொடருகிறது அவரது வெற்றிகள். வாரன் பஃபெட்டுக்கு வயது 81, திறமையானவர். தனது திறன் பற்றி தெளிவாக தெரிந்துவைத்திருப்பவர். அதனை முழுமையாக இன்றளவும் பயன்படுத்துபவர். அதனால் அவர் விரும்பும் பணத்தினை அள்ளித் தட்டிக் கொண்டிருப்பவர்.

விவேகானந்தர், பாரதியார், மாவீரன் அலெக்ஸாந்தர், கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் போன்றவர்கள் அவரவர் எடுத்துக்கொண்ட துறைகளில் மிகப்பெரும் பங்களிப்பு செய்தவர்கள். சாதனையாளர்கள். வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த இவர்களுக்குள் ஓர் ஒற்றுமை உள்ளது. அது அவர்கள் ஆயுள் சம்மந்தப்பட்டது. அவர்கள் எல்லாம் வாழ்ந்தது 40 வருடங்களுக்கும் குறைவு. (விவேகானந்தரும் பாரதியாரும் அவர்களுடைய 39 வது வயதிலும், மாவீரன் அலெக்ஸாந்தர் 33லும், கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் அவர்கள் 29வது வயதிலும் மறைந்தவர்கள்).

அனைவரும் திறமைசாலிகள். வாழ்ந்த காலத்தில் நிறைய செய்தவர்கள். இவர்கள் மட்டும் இன்னும் சில காலம் கூடுதலாக வாழ்ந்திருந்தால் எப்படியிருந்திருக்கும்? இன்னும் எவ்வளவோ செய்திருப்பார்கள். அவர்களின் கால அளவு குறைந்துவிட்டதன் காரணமாக, அவர்களின் பங்களிப்பு கிடைக்க வேண்டிய அளவு கிடைக்காமல் போய் விட்டது.

இரண்டு வெவ்வேறு தகவல்கள். இரண்டையும் ஒருசேரப் பார்த்தால் கிடைக்கிற செய்தி இதுதான். திறமை வேண்டும். அதன் பயனை முழுமையாக அடைய, அந்த திறமையை அதிக நேரம் பயன்படுத்த வேண்டும். அதாவது, வெற்றியின் அளவு திறமை + டைம்.

ஒரு குழாயில் தண்ணீர் வருகிறது. அது எவ்வளவு தூரம் நமக்குப் பயன் தருகிறது? நாம் எவ்வளவு நேரம் அந்தக் குழாயில் தண்ணீர் பிடிக்கிறோம் என்பதைப் பொறுத்தது. மழை அடித்துக்கொண்டு ஊற்றுகிறது. கனமழை. நீர்பிடிப்பு ஏரிகளில் தண்ணீர் நிறைந்ததா என்பது, இன்னொரு விஷயத்தினையும் பொறுத்தது அல்லவா? மழை எவ்வளவு நேரம் பெய்தது?

அந்த கிரிக்கெட் வீரர் சந்தித்த ஒவ்வொரு பந்தினையும் அடித்து விளாசினார். ஓவர் ஒன்றுக்கு சராசரியாக அவர் எடுத்த ஓட்டங்கள் நான்கு. அவர் மொத்தம் எடுத்த ஓட்டங்களின் எண்ணிக்கை, அவர் அவுட் ஆகாமல் சந்தித்த பந்துகளின் எண்ணிக்கையையும் பொறுத்தது அல்லவா? வேறு ஒருவர் புகழ்பெற்ற பேச்சாளர். அவர் ஒரு மணி நேரம் பேசுவதற்கு 5000 ரூபாய் கொடுக்கிறார்கள். நல்ல தொகைதான். ஆனால் அவர் எவ்வளவு உழைக்கிறார் என்பது, அவர் ஒரு நாளைக்கு, ஒரு வாரத்திற்கு, மாதத்திற்கு அப்படிப்பட்ட பேச்சுகள் எத்தனை கொடுக்கிறார் என்பதை வைத்துத்தானே முடிவு செய்யமுடியும்!

செய்தி இதுதான்: நன்றாக செய்ய வேண்டும். அதனை அதிக நேரம் செய்ய வேண்டும். காலம் முக்கியம். செய்திகள் சரி. இப்போது நம்மை நாமே சில கேள்விகள் கேட்டுக் கொள்ளலாம்.

நாம் நம்முடைய நேரத்தினை, முழுமையாக பயன்படுத்துகிறோமா? சரியாக பயன்படுத்துகிறோமா? மிகச்சிறந்த பயன்தரத்தக்க வகையில்தான் செலவழிக்கிறோமா? மொத்தத்தில், Are we putting it to best use?

அது எந்த துறையாக இருந்தாலும் சரி, வெற்றி பெற்றவர்கள் எல்லாம் அவர்களின் நேரத்தினை சரியாக பயன்படுத்தியிருக்கிறார்கள். மின்சாரம், இடம், யந்திரங்கள், பணம் போன்ற வளங்களைப் போலவே, நேரம் என்பதும் முக்கியமான அதே சமயம் பொதுவான வளம். எல்லோருக்கும் தேவைப்படும் எல்லோரிடமும் இருக்கும் வளம். சிலர்தான் அதனை சரியாக முழுமையாக பயன்படுத்துகிறோம். வேறுசிலர் தவற விடுகிறோம்.

"ஓகோ! இது நேர மேலாண்மை பற்றியதா? நேர மேலாண்மை பற்றி எனக்குத் தெரியுமே!"

"அப்படியா? சரி. நீங்கள் எப்படி நேரத்தை சரியாக பயன்படுத்துகிறீர்கள்?"

"நான் தினமும் சீக்கிரமே எழுந்து விடுகிறேன்"

"நல்லது. சீக்கிரம் எழுவதால், நாள் ஒன்றுக்கு கூடுதல் நேரம் கிடைக்கும்தான். பிறகு?"

"எங்கும் தாமதமாகவே போக மாட்டேன். சரியான நேரத்திற்கு போய் வேலையை முடிப்பேன்."

"நேரம் தவறாமையா? இதுவும் நல்ல பழக்கம்தான். உங்கள் நேரம் மட்டுமல்ல, மற்றவர்கள் நேரமும் வீணாகாமல் பயன்பெறும். பிறகு?"

"நான் எதையுமே வேகமாகச் செய்துவிடுவேன்".

"இதுவும் நல்லதுதான். மற்றவர்கள் குறிப்பிட்ட நேரத்தில் செய்வதைக் காட்டிலும் உங்களால் கூடுதலாகவே செய்யமுடியும். பிறகு?"

"எதையுமே நான் முதன் முறையே சரியாக செய்துவிடுவேன்"

"நிச்சயமாக. இதனால் 'வீண்' (Waste) என்பது குறையும். பிறகு?"

"என்ன இது? இவ்வளவும் சொல்கிறேன். இன்னும் பிறகு பிறகு என்றால்? டைம் மனேஜ்மென்ரில் இன்னும் வேறு ஏதாவது இருக்கிறதா என்ன?"

"நிறையவே இருக்கிறது. பார்க்கத்தான் போகிறோம். அதற்கு முன்னால்... ஒரு சின்ன கேள்வி".

"ஒரே நேரத்தில் பல வேலைகள் செய்வது: ஒரே நேரத்தில் பல வேலைகள் முடிப்பது. இவை இரண்டுக்கும் இடையே ஏதும் வித்தியாசம் இருக்கிறதா? தெரிகிறதா?"

அவர் பெயர் வெங்கடேஸ்வரன். நான் பணியாற்றிய ஒரு நிறுவனத்தில் ஊழியர் நல அதிகாரியாக இருந்தவர். நான் மிக அவசரம் என்று சொல்லி, அவரிடம் ஒரு கோரிக்கை வைத்திருந்தேன். அதன் முன்னேற்றம் குறித்து தெரிந்து கொள்ளுவதற்காக, அவரை சந்திக்கப் போயிருந்த சமயம், அவர் வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டு, சாவாதனமாக பேப்பர் படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். "என்ன சார்? என் விஷயம் என்ன ஆச்சு" என்று கேட்டதற்கு, ஆகிவிடும் ஆகிவிடும் என்றார்.

என் கண்ணில் அவநம்பிக்கையை பார்த்திரு

தொடர்ச்சி அடுத்த பக்கம்...



## மொன்றியல் மதுராலயா நாட்டியப் பள்ளி நாடாத்திய நிகழ்ச்சிகள்



கடந்த செப்ரெம்பர் 11ம் திகதி மொன்றியல் திருமுருகன் ஆலயத்தில் நடைபெற்ற மதுராலயா நாட்டியப் பள்ளி அதிபர் ஸ்ரீமதி சீதா தமிழ்ச்செல்வனின் மாணவர்கள் பங்குபற்றிய கிருஷ்ண நடனத்தின் போது எடுத்த படம்.





கடந்த செப்ரெம்பர் 25ம் திகதி மொன்றியல் மதுராலயா நாட்டியப் பள்ளி மாணவர்களின் ஐந்து வித நடன நிகழ்வுகள் International Society of Krishna Consciousness இன் ஒழுங்கமைப்பினரால் நிகழ்த்தப்பட்டது. இருபது மாணவர்கள் பங்குபற்றிய நடன நிகழ்வினையே மேலே காண்கிறீர்கள்.

## மொன்றியலில் திரு.சோம சச்சிதானந்தனின் பன்னிரு திருமுறை அமுதம் வெளியீடு

கனடா வாழ் தமிழ் கலைஞர் திரு. சோம சச்சிதானந்தனின் பன்னிரு திருமுறை அமுதம் - "பாக்கியநாதம் 2" குறுந்தட்டு வெளியீட்டு விழா கடந்த செப்ரெம்பர் 17ம் திகதி சனிக்கிழமை மாலை மொன்றியல் ஸ்ரீ துர்க்கை அம்மன் ஆலய மண்டபத்தில் 'தமிழ்ச் சுடர்' உயிரவன் தலைமையில் நடைபெற்றது. ரொறன்ரோவில் அண்மையில் இவ் இறுவெட்டு வெளியீடு சிறப்பாக இடம்பெற்றது என்பது இங்கு குறிப்பிடத் தக்கது.











ப்பாரோ என்னவோ திடீரென்று, "வள்ளியப்பன், நான் ஏதோ சும்மா உட்கார்ந் திருக்கிறேன். அதனால் வேலை ஒன்றும் ஆகவில்லை என்று தானே நினைக்கிறீர்கள்! என்னோ டு வாருங்கள் காட்டுகிறே ன்" என்று சொல்லியபடி எழுந்தார். பின்பு என்னை அந்த அலுவலகத்தின் பல்வேறு அறை களுக்கு அழைத்துப் போனார். ஒவ்வொரு அறையிலும் சிலர் ஏதோ வேலைகள் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் செய்து கொண்டிருந்த வேலைகளைப் பற்றி அவர்களை விட்டே என்னிடம் சொல்லச் சொன்னார். எல்லாம் என் சம்மந்தமான வேலைகள்தான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரிடம் அவசரம் என்று சொல் கேட்டுக் கொண்டிருந்த வேலைகளை அவர் செய்யாமல் சாவாதன மாக உட்கார்ந்திருக்கிறாரோ என்று நான் நினைத்தது தவறு என்பதை உடனே உணர்ந்தேன். அவர் செய்யவில்லையே தவிர, அவர் செய்ய வைத்துக் கொண்டிருந்தார். அவரே செய்தால் என்ன, செய்ய வைத்தால் என்ன? பார்க்கப்போனால், அவரே வேகமாக செய்தால் கூட என் வேலை, அங்கே நடந்துகொண்டிருந்த வேகத்தில் முடிந்திருக்காது.

நாமே பலதரப்பட்ட வேலைகளையும் செய்வது மல்டி டாஸ்கிங் (Multi Tasking).

பலவற்றையும் உரியவர்களை வைத்து செய்துமுடிப்பது கெட்டிங் டன் (Getting Done).

இதுதான் பல வேலைகள் செய்வதற்கும், பல வேலைகள் முடிப்பதற்கும் இடையே இருக்கும் வித்தியாசம். நம்மால் முடிந்த வரை வேகமாக சரியாக இருப்பது நல்லதுதான். ஆனால் அதுமட்டுமே, மிகப்பெரிய பலன்களைத் தராது. நேரத்தினை சரியாகப் பயன்படுத்த இன்னும் கூட சில வழிமுறைகள் இருக்கின்றன.

தனிநபர்களையும் தலைவர் களையும் வேறுபடுத்தும் வழிமுறைகள் உள்ளன. வெற்றிக்கான அப்படிப்பட்ட சில நேர மேலாண்மை வழிகளை தொடர்ந்து பார்க்கலாம்.

(தொடரும்)



## வரும் வாரங்களில் நடைபெறும் சமூக நிகழ்வுகளின் தொகுப்பு

### டுறம் பிரதேசத்திலுள்ள கல்விச்சபையின் இலவச தமிழ் வகுப்புக்கள்

டுறம் தமிழ் ஒன்றியத்தின் ஆதரவில் டுறம் கல்விச் சபையினால் நடாத்தப்படவிருக்கும் இலவச தமிழ் வகுப்புக்கள் இம்மாதம் 6ம் திகதி முதல் வியாழக்கிழமைகளில் மாலை 6 மணி தொடக்கம் இரவு 8.30 வரையும் Pineridge Secondary School - Pickering (2155 Liverpool Road North Pickering) இல் நடைபெறவுள்ளது.
மேலதிக விபரங்களுக்கு அழையுங்கள்: ரவி 416.994.1416

### யாழ் இந்துக் கல்லூரிச் சங்கம் - கனடா பெருமையுடன் வழங்கும் கலையரசி - 11

யாழ் இந்துக்கல்லூரிச் சங்கம் - கனடா வழங்கும் கலையரசி 11 இம்மாதம் 8ம் திகதி சனிக்கிழமை மாலை 5.31 மணிக்கு சீனக் கலாச்சார மண்டபத்தில் நடைபெறும். வழமை போல் இவ்வருடமும் வித்தியாசமான கலைநிகழ்ச்சிகளுடன் உங்களை மகிழ்விக்கக் காத்திருக்கின்றது.
மேலதிக விபரங்களுக்கு: 416.930.9119, 647.298.1894, 416.230.5506

### அமைதியின் நாதம்

கனேடியத் தெற்காசிய செவிப்புலனிழந்தோர் விளையாட்டு மற்றும் பொழுது போக்குக் கழக அமைப்பு பெருமையுடன் வழங்கும் ' அமைதியின் நாதம்' நிகழ்வு எதிர்வரும் இம்மாதம் 8ம் திகதி சனிக்கிழமை மாலை 5.30 மணிக்கு ஸ்காபரோவில் உள்ள கனடா கந்தசாமி ஆலய மண்டபத்தில் நடைபெற உள்ளது. மேலதிக தொடர்புகளுக்கு: 647.861.4063 , 416.299.9715

### ஸ்ரீ இராம கிருஷ்ண சேவாச்சிரமம் நடாத்தும் வாணி விழா

ஸ்ரீ இராம கிருஷ்ண சேவாச்சிரமத்தின் வாணி விழா இம்மாதம் 8ம் திகதி சனிக்கிழமை மாலை 5 மணிமுதல் இரவு 9 மணிவரை 65 Greencrest Circuit இல் அமைந்துள்ள மண்டபத்தில் நடைபெறும். பிரதம விருந்தினராக சுவாமி கிருபாமயானந்தாஜி மஹராஜ் (தலைவர், ஸ்ரீஇராமகிருஷ்ண மிஷன் - ரொறன்ரோ) அவர்கள் கலந்து சிறப்பிக்கவுள்ளார். சங்கீதம், நடனம், இசை நிகழ்ச்சிகள் உட்பட பல்வேறு பக்தி மயமான நிகழ்ச்சிகள் நடைபெறுவதுடன் பேரறிஞர் முருகவே பரமநாதன் (ஆழ்கடலான்), வைத்திய கலாநிதி லம்போதரன் ஆகியோரின் ஆன்மீகச் சொற்பொழிவுகளும் இடம்பெறும். அனைவரையும் அன்போடு அழைக்கின்றார்கள்.
மேலதிக விபரங்களுக்கு: 416.615.2063, 416.431.1814

### கனடா காரை கலாச்சார மன்றம் வழங்கும் 'காரை வசந்தம் 2011'

கனடா காரை கலாச்சார மன்றம் வழங்கும் காரை வசந்தம் 2011 இம்மாதம் 9ம் திகதி மாலை 5.30 மணிக்கு ஸ்காபரோவில் அமைந்துள்ள சீனக் கலாச்சார மண்டபத்தில் நடைபெறும்.
மேலதிக விபரங்களுக்கு:
Ravi Raveendran 416.817.8479 Malar 416.566.9776
karainagar@gmail.com

### வேலாயுதம் மகாவித்தியாலயம் பழைய மாணவர் சங்கப் பொதுக்கூட்டம்

வேலாயுதம் மகாவித்தியாலய பழைய மாணவர் சங்கத்தின் பொதுக்கூட்டம் இம்மாதம் 9ம் திகதி ஞாயிற்றுக்கிழமை மாலை 3 மணிமுதல் 6 மணிவரை ஸ்காபரோ சிவிக் சென்ரரில் நடைபெறும். பொதுக்கூட்டத்தில் வருடாந்த அறிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டு வெற்றிடங்களுக்கான புதிய நிர்வாகிகள் தெரிவு இடம்பெறும். அத்துடன் பாடசாலையின் தற்போதய நிலை, மேற்கொள்ளவேண்டிய அபிவிருத்திகள், நிதி சேகரிப்பு தொடர்பாக அங்கத்தவர்கள் கருத்துக்கள் என்பன இடம்பெறும். வேலாயுதம் மகாவித்தியாலய பழைய மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் இந்நிகழ்வில் கலந்து உங்கள் கருத்துக்களையும் எண்ணங்களையும் வெளிப்படுத்துமாறு அன்புடன் வேண்டுகிறோம். மேலதிக விபரங்களுக்கு:
திரு. இ. சுந்தரலிங்கம் 905.642.0283
திரு. க. பொன்னம்பலம் 416.283.0376

### நூல் வெளியீட்டு விழா 'காலமும் கலையும்'

ரொறன்ரோவில் நன்கு அறிமுகமான சாரா ரெயிலர் சரஸ்வதி பாலராஜாவின் 'காலமும் கலையும்' நூல் வெளியீட்டு விழா இம்மாதம் 9ம் திகதி மாலை 3 மணிக்கு கனடா கந்தசாமி ஆலய மண்டபத்தில் நடைபெறும். அனைவரையும் அன்போடு அழைக்கின்றார்கள்.
மேலதிக தொடர்புகளுக்கு: 416.265.0025




தோல்வி என்றால்...
நீங்கள் எதையும் சாதிக்கவில்லை என்று அர்த்தமில்லை;
எதையோ கற்றுக்கொண்டிருக்கிறீர்கள் என்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் அவமானப்பட்டதாய் அர்த்தமில்லை;
மீண்டும் முயல்வதற்குத் தகுதி பெற்றிருப்பதாய் அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் செயலாற்ற முடியாதவர் என்று அர்த்தமில்லை;
வித்தியாசமாக செய்து பார்க்கவேண்டும் என்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் வாழ்வை வீணடித்துவிட்டிருக்கிறீர்கள் என்று அர்த்தமில்லலை;
புதிதாகத் தொடங்க புதிய பலம் பெற்றிருப்பதாக அர்த்தம்.

தோல்வி என்றால்...
இலட்சியத்தை நீங்கள் எட்டப் போவதில்லை என்று அர்த்தமில்லை;
எண்ணியதை விடவும் கொஞ்சம் தாமதமாகும் என்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
வாழ்க்கை உங்களை நிராகரிக்கிறது என்று அர்த்தமில்லை;
வாழ்க்கை உங்களை பலம்பொருந்தியவர் ஆக்குகிறது என்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் ஒன்றைக் கைவிடவேண்டுமென்று அர்த்தமில்லை;
இன்னும் சரியாகக் கையாள வேண்டுமென்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் முகத்தைத் தொங்கப்போட வேண்டுமென்று அர்த்தமில்லை;
முத்திரை பதிக்கத் தயாராக வேண்டுமென்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நீங்கள் யாரையும் நம்பக்கூடாதென்று அர்த்தமில்லை;
நீங்கள் உங்களையே இன்னும் நம்ப வேண்டுமென்று அர்த்தம்.

தோல்வி என்றால்...
நிகழக்கூடாத தீமை நிகழ்ந்துவிட்டதாக அர்த்தமில்லை;
நிகழ வேண்டிய வெற்றி நிகழப்போவதாக அர்த்தம்.

# பரவசத்தில் ஆழ்த்திய பரதசூடாமணி நடனக் கல்லூரியின் பரத சங்கமம் – 2011

கோடை காலத்தின் இறுதியில் இனிமையான மாலைப் பொழுதில், பரதக் கலை காண வந்தோர் எல்லோரையும் பரவசத்தில் ஆழ்த்தியது பரத சங்கமம்-2011 ஆடற்கலை விழா. இந்த விழா கலைமணி, கலாபூஷணம் ஸ்ரீமதி துவாராகா கேதீஸ்வரன் அவர்களின் பரதசூடாமணி நடனக் கல்லூரியினால் செப்ரெம்பர் மாதம் 17ம் திகதி பிறம்ரன் Cyril Clark Library Hall இல் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

ஆசிரியையின் அன்புக்குரிய மகன் திரு. துஸ்யந்தனும் திருமதி. சங்கீதா துஸ்யந்தனும் மங்கல விளக்கேற்றி ஆரம்பித்து வைக்க மாணவர்களால் இறைவணக்கம், தமிழ்த்தாய் வாழ்த்து, கனடாப் பண், என்பன அழகிய தமிழில் இசைக்கப்பட்டன. அகவணக்கம் செலுத்தப்பட்டபின் நிகழ்வுகள் ஆரம்பமாகின. வரவேற்புரையை கல்லூரி மாணவி சிந்து இரவீந்திரகுமார் நிகழ்த்த நிகழ்ச்சிகளை திருமதி.கிருஷ்ணவேணி சோதிநாதன் தொகுத்து வழங்கினார்.

விழாவிற்கு பிரதம விருந்தினராக மனோதத்துவ மருத்துவ நிபுணர் ஞானேஸ்வரனும் அவர்தம் பாரியார் திருமதி பத்மினி ஞானேஸ்வரனும், சிறப்பு விருந்தினராக மணிக் கல்வி நிலைய அதிபர் திருமதி. நளினி பகீரதன் அவர்களும் வருகை தந்து சிறப்பித்திருந்தனர்.

ஆலடியில் அமர்ந்த விநாயகனே என்ற விநாயகர் கீர்த்தனத்திற்கு செல்வி. மயூரா சோதிநாதனின் ஆடலுடன் நடன நிகழ்ச்சிகள் ஆரம்பமாகியது. மாணவர்களின் பிரிவுகளின்படி நடனங்கள் தொடர்ந்து நடைபெற்றன. சின்னஞ்சிறுமியர் கண்ணன் நடனம், குறத்தி நடனம் என்பவற்றை மிக அழகாக அபிநயம் செய்து ஆடியிருந்தனர். 'ஓம்கார நாதம் ஒலித்திடும்' என்ற கீர்த்தனமும், 'என்ன தவம் செய்தனை' என்ற பதமும், 'ஆனந்த நடமிடும் பாதன்' என்ற கீர்த்தனமும் மற்றும் தில்லானா, ஜதீஸ்வரம் என்பன பரதநாட்டியத்தின் முப்பரிமாணங்களான பாவம், ராகம், தாளம் என்பனவற்றை சிறப்பாக வெளிப்படுத்திய நடனங்களாக அமைந்திருந்தன.

பரதக் கலை தமிழருடையது என்பதற்குச் சான்றாக கும்மி நடனம், குறத்தி நடனம், மீனவ நடனம் போன்ற தமிழருடைய பாரம்பரிய கிராமிய நடனங்கள் அமைந்திருந்தன. விறுவிறுப்பான இசையுடன் கூடிய கிராமியப் பாடல்களுக்கு மிக அழகிய பலவர்ண ஆடைகளுடன் மாணவிகள் இந்நடனங்களை விரும்பி ரசித்து ஆடியதைக் காணக்கூடியதாக இருந்தது.

இந்த பரதசங்கமம் ஆடற்கலை விழா ஒரு தமிழர் விழா என்று துணிந்து கூறும் வகையில் பூமியின் அழகே தமிழே, தாய் மண்ணை முத்தமிடவேண்டும் , ஆரிய மொழிகள் தவழ்ந்திடும் முன்னே என்ற அருமையான தமிழிசைப் பாடல்களுக்கு அழகான பரதக் கலையின் அபிநயங்களுடனும் ஏழுரசங்களை வெளிப்படுத்தும் முகபாவங்களுடனும் மாணவிகள் ஆடி சபையோரின் பலத்த கரவொலியைத் தட்டிக் கொண்டனர். பிரதம விருந்தினர் மனோதத்துவ நிபுணர் ஞானேஸ்வரன் அவர்கள் தனது உரையில், இன்றைய விழானைப் பார்க்கும்போது பிறம்ரனில் தமிழும் பரதக்கலையும் வாழ்கிறது, வளர்கிறது என்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைவதாகக் கூறினார். ஆசிரியை ஸ்ரீமதி துவாரகா கேதீஸ்வரனின் திறமைகளையும் சாதனைகளையும் குறிப்பிட்டார்.

பரதசூடாமணி நடனக் கல்லூரி அதிபர், கலைமணி, கலாபூஷணம் ஸ்ரீமதி துவாரகா கேதீஸ்வரன் அவர்களைக் கௌரவித்து திருமதி. பத்மினி ஞானேஸ்வரன் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். மாணவிகள் மலர்ச்செண்டு வழங்கி ஆசிரியைக்கு தமது அன்பைத் தெரிவித்தனர்.

கல்லூரி மாணவி செல்வி. காயத்திரி பரமேஸ்வரனின் நன்றியுரையைத் தொடர்ந்து மாணவர்களுக்கு பாராட்டுப் பரிசுகள் வழங்கலுடன் விழா இனிதே நிறைவு பெற்றது.

– தமயந்தி










## நாதஸ்வர தவில் இசை சர்வதேச அமைப்பின் 14 ம் ஆண்டு விழா

நாதஸ்வர தவில் இசை சர்வதேச அமைப்பின் 14ம் ஆண்டு விழாவானது இம்மாதம் 10 ம் திகதி திங்கட்கிழமை மாலை 4.30மணிக்கு ஸ்ரீ சத்ய சாயி மண்டபத்தில் (5321 Finch Avenue East @ Middlefield) நடைபெற ஏற்பாடாகி உள்ளது. இலங்கை, இந்தியா மற்றும் ரொறன்ரோக் கலைஞர்களும் இவ்விழாவினைச் சிறப்பிக்க உள்ளனர். மேலதிக விபரங்களுக்கு அழையுங்கள்: ஆ.முருகதாஸ் 416.724.2502, 416.420.1309

## பொதிகைக் கோலங்கள் 2011

தமிழ்ப் பண்பாட்டு முன்னேற்றப் பேரவை கனடா பெருமையுடன் வழங்கும் தமிழ்ப் பண்பாட்டுக் கலைவிழாவான பொதிகைக் கோலங்கள் 2011 இம்மாதம் 15ம் திகதி சனிக்கிழமை மாலை 5 மணிக்கு ஆர்மேனியன் யூத் சென்ரரில் நடைபெறும். மேலதிக விபரங்களுக்கு:

Dr. Balasundram 416.267.5255
P.S. Suthakaran 416.292.0033
P. Santha 416.200.5470
Nirothini 416.438.3494
Meleni David 416.430.0044

# 'இன்றைய உலகின் காலங்காட்டி' நூல் வெளியீடு

கடந்த செப்ரெம்பர் மாதம் 10ந் திகதி 2011 சனிக்கிழமையன்று மாலை ஸ்காபரோ சிவிக் சென்ரர் மண்டபத்தில் இந்நூல் வெளியீடு செய்யப் பட்டது.

இதன் நூலாசிரியர் கந்தர் சிவநாதன் அவர்கள் இலங்கை பல்கலைக் கழக கணிதம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் இளமானிப் பட்டத்தினையும், அமெரிக்கா விலுள்ள ஒறிக்கன் பல்கலைக் கழகத்தில் முதுமானிப் பட்டத்தையும், கல்வி, சமூகவியல் டிப்ளோமா வினையும் பெற்றுள்ளவர் ஆவார்.

ஆசிரியராகவும், பின் விஞ்ஞான, கணித விரிவுரை யாளராகவும், யாழ் பல்கலைக் கழக பதிவாளராகவும், இணைப்பிராந்திய கல்விப் பணிப்பாளராகவும் கடமை யாற்றிய இவரது முதல் நூல் 'அதிசய வானியல் ஒரு பஞ்சாங்க உண்மை விளக்கம்' என்பது யாவரும் அறிந்ததே.

தலைவர் திரு தங்கவேலு அவர்களது தலைமையில் நிகழ்ச்சி குறிப்பிட்ட நேரத்தில் ஆரம்பமாகியது. திரு. வேல் விவேகானந்தன் தொகுப்பாளராக கடமையாற்ற பேராசிரியர் திரு. இ. பாலசுந்தரம் ஆய்வுரை வழங்கியிருந்தார். கவிஞர் கந்தவனம், அதிபர் திரு. பொ. கனகசபாபதி, திரு. பொன். குலேந்திரன், Dr. S. கிருஷ்ணபிள்ளை ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

திரு.மு.கந்தையா அவரது நினைவாக வழங்கப்பட்ட காணிக்கைப் பிரதியினை அவரது மகன் பெற்றுக்கொள்ள சிறப்புப் பிரதியினை Dr. A. சாந்தகுமார் பெற்றுக் கொண்டார்.

இன்றைய உலகில் வானியல் பற்றிய இவ்வரிய நூல் இளந் தலைமுறையினருக்கும் உதவும் வண்ணம் வெளியிட்டமை அனைவருக்கும் பயனுள்ளதாக அமைந்துள்ளது. குறிப்பிட்டபடி மாலை 9 மணிக்கு விழா இனிதே நிறைவேறியது.
















**சென்ற மாதம் நடைபெற்ற ஸ்காபரோ செல்வச் சந்நிதி ஆலயத்தின் தேர்த் திருவிழாவின் போது எடுத்த படங்கள்**








AMIRTHALAYA ACADEMY OF FINE ARTS
கலை இன்பம் காண்போம்









